25th March 1958]

(*b*) the number of municipalities and major panchayats in which such work has been taken up?

THE HON. SRI M. A. MANICKAVELU : (*a*) Amount allotted during 1957–58 for—

(1) Slum Clearance Schemes.—Nil.

(2) Town Planning Schemes.—Rs. 9,40,550.

(*b*) Eight municipalities and three panchayats.

SRI P. G. MANICKAM : இந்த பஞ்சாயத்து போர்ட் மூலமாகவும், முனிஸிப்பாலிட்டிகள் மூலமாகவும் ஹரிஜனங்களுக்கு வீடு கட்ட இந்தத் தொகையிலிருந்து எவ்வளவு செலவழிக்கப்பட்டது ? எந்தெந்த முனிஸிப் பாலிட்டிகளும், பஞ்சாயத்து போர்ட்களும் வீடுகள் கட்ட பிரயாசை எடுத்துக் கொண்டன ?

THE HON. SRI M. A. MANICKAVELU : கனம் அங்கத்தினர் பொது வாக கேட்டிருக்கிறார்கள். ஆகவே அந்த விவரத்தை இந்தக் கேள்வி யிலிருந்து சொல்லமுடியாது

SRI V. K. KOTHANDARAMAN : பெரிய நகரங்களில் சேரி ஒழிப்புத் திட்டத்தில் கவனம் செலுத்துவது போல் கிராமங்களில் கவனம் செலுத்தப் படவில்லை. இதுவிஷயமாக பார்லிமெண்டில் ஒரு கேள்வி கேட்டபோது. . .

MR. SPEAKER : பார்லிமெண்ட்டில் கேட்டால் அதற்கு இந்த மந்திரி எப்படி ஜவாப்தாரியாக முடியும் ? பார்லிமெண்ட் சமாசாரம் இங்கு வேண் டியதில்லை.

SRI V. K. KOTHANDARAMAN : சேரி அபிவிருத்தி சம்பந்தமாக எவ்வளவு ராஜ்ய சர்க்கார் கேட்கிறார்களோ, அவ்விஷயத்தில் நாங்கள் அக்கறை காட்டுவோம், கவனம் செலுத்துவோம். . . .

MR. SPEAKER : I disallow this supplementary question.

*Prime Minister's visit.*

* 396 *Q*.—SRI A. V. P. ASAITHAMBI AND SRI A. GOVINDA SAMY : Will the Hon. the Chief Minister be pleased to state the total expenditure incurred by the Government on account of the Prime Minister's visit to Madras on the 6th January, and his return from Madras on the 7th January 1958?

THE HON. SRI C. SUBRAMANIAM : A total expenditure of Rs. 43,542–20 nP. was incurred by this Government in connection with the visit to Madras of the Prime Minister of India on 6th January 1958.

SRI A. GOVINDASAMY : இம்மாதிரி பிரதமர் அவர்கள் அடிக்கடி இந்தப் பகுதிக்கு வருவதால் அதிகச் செலவு ஏற்படுவதால் இந்தச் செலவை மத்திய சர்க்காரே ஏற்றுக்கொள்ள வேண்டுமென்று இந்த சர்க்கார் மத்திய சர்க்காரைக் கேட்குமா ?

THE HON SRI. C. SUBRAMANIAM : இதில் செலவு கொஞ்சம் அதிக மானதற்குக் காரணம் திராவிடமுன்னேற்றக்கழக இயக்கந்தான் என்று தெரிவித்துக் கொள்கிறேன். ஆகவே, தயவுசெய்து அவர்கள் சட்ட விரோதமாக எதுவும் செய்யாமல் நல்லவழியில் நடந்துகொள்வார்களே யானால் குறைவாகச் செலவு செய்தால் போதும். பிரதம மந்திரியையும் இங்கு அடிக்கடி வரவேற்கலாம்.

[25th March 1958

SRI S. NAGARAJA MONIGAR : "கல்லெல்லாம் மாணிக்கக் கல்லாமோ" என்பதுபோல் பண்டிட் ஜவஹர்லால் நேரு என்ற மாணிக்கம் இந்த நாட்டிற்கு கிடைத்திருப்பதில் நமக்கு எத்தனை கோடி ரூபாய். . .

MR. SPEAKER : ஒரு தடவை ஒரு கேள்வி கேளுங்கள். பிறகு அடுத்த கேள்வி கேட்கலாம்.

SRI A. GOVINDASAMY : நம் பிரதமமந்திரி இங்கு வந்த காலத்தில் அவர்களுக்காக எவ்வளவு போலீஸ்காரர்கள் நியமிக்கப்பட்டார்கள் ? அதற்கான செலவு என்ன ?

THE HON. SRI C. SUBRAMANIAM : அவர்களுக்காக போலீஸ்காரர்கள் நியமிக்கப்படவில்லை. திராவிட முன்னேற்றக் கழகக்காரர்களுக்காகத்தான் போலீஸ்காரர்கள் நியமிக்கப்பட்டார்கள். அதனுல்தான் செலவு ஏற்பட்டது, கூடுதலாக.

SRI A. VEDARATHNAM : இந்தச் செலவில், எரிக்கப்பட்ட பஸ்களின் கிரயமும் சேர்ந்திருக்கிறதா ? இல்லையென்றுல் அதன் மதிப்பு எவ்வளவு ?

THE HON. SRI C. SUBRAMANIAM : அதுபற்றி எனது சக மந்திரியவர்களிடம் கேள்வி கேட்டால் தெரியும். அந்த விவரம் இதில் இல்லை.

SRI K. VINAYAKAM : புதுப்பேட்டையில் இருக்கிற ஒரு காங்கிரஸ் கௌன்ஸிலரின் ஜவளிக்கடை கொள்ளை அடிக்கப்பட்டு, அவரையும் அடித்தார்கள். அந்தச் செலவும் இதில் சேர்ந்திருக்கிறதா ?

MR. SPEAKER : The hon. Member may put a separate question.

SRI A. GOVINDASAMY : திராவிடமுன்னேற்றக்கழகக்காரர்களுக்காக போலீஸ்காரர்கள் போட்டதாகச் சொன்னூர்கள். பிரதமர் தென்னகத்திற்கு வரும்போதெல்லாம் தென்னகமக்களின் மனம் புண்படாமல் பேசிவிட்டுப் போக அமைச்சர் அவர்கள் அவர்களுக்குத் தெரிவிப்பார்களா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : இதிலே யார் புண்படப் பேசுகிறுர்கள் என்பது கோவிந்தசாமியே யோசித்துப் பார்த்தால் நன்கு தெரியும். ஆகவே, தாங்கள் பேசும் வார்த்தையை கொஞ்சம் கவனித்துப் பார்ப்பார்களேயானுல் மற்றவர்களின் பேச்சும் அதற்குத் தகுந்தமாதிரியிருக்கும் என்று தெரிவித்துக் கொள்கிறேன்.

SRI V. SANKARAN : நாட்டினுடைய ஐக்கியத்திற்கும், நாட்டினுடைய நலத்திற்கும் நம்முடைய பிரதமர் நேரு அவர்கள் எவ்வளவு தடவை இங்கு வந்து விட்டுப் போனுலும், எவ்வளவு செலவானுலும், அவரை வரவேற்க சர்க்கார் தயாராயிருப்பார்களா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : நாம் வரவேற்கத் தயாராயிருக்கிறேம். ஆனுல் இந்த நாடு ஐக்கியமாயிருப்பதால், அவர்கள் எல்லாப் பகுதிகளுக்கும் போக வேண்டியதாகயிருக்கிறது. உடனடியாக வரவில்லையென்றுல் திராவிட முன்னேற்றக் கழகத்தினுடைய எதிர்ப்பினுல் தான் வரவில்லை என்று அவர்கள் சந்தோஷப்பட்டுக் கொள்வார்கள் என்று நினைக்கிறேன்.

SRI T. S. RAMASWAMY PILLAI : May I know the broad heads of this expenditure and the amount spent under each head?

THE HON. SRI C. SUBRAMANIAM : Generally on bandobust arrangements, Sir.